2H-5

உ
சிவமயம்

கோவிலூர் ஆதீனம் மடாலயத்தில்
ஏழாவது பட்டத்தில் ஞானாசிரியராக
எழுந்தருளியிருந்த

# ஸ்ரீலஸ்ரீ
# மகாதேவ ஞானதேசிக சுவாமிகள்

அவர்களின் வரலாறு










ஐம்பதாவது ஆண்டு குருபூஜை விழாவில்
வெளியிடப்பெற்றது

முதற் பதிப்பு : 12-7-1997
பதிப்பு உரிமையுடையது
ஈஸ்வர வருஷம் ஆனிமாதம்
28-ம் தேதி சனிக்கிழமை

உ

ஸ்ரீசற்குரு துணை

கோவிலூர் மடாலயம்

# ஸ்ரீலஸ்ரீ மகாதேவ ஞானதேசிக சுவாமிகளின்

தோத்திரப் பதிகம்

இஃது

மேற்படி சுவாமிகளின் மாணாக்கராகிய

## மகா. சோமசுந்தர ஐயா அவர்களால்

இயற்றப்பெற்றது.

எண்சீரடி ஆசிரிய விருத்தம்

காசாசை முதன்மூன்றும் கழிப்ப தற்குங்
கடப்பரிய வெங்கோசங் கடப்ப தற்கும்
பேசாத அனுபூதி பிறப்ப தற்கும்
பேதமன மிறப்பதற்கும் பெரிது மெண்ணித்
தேசாருஞ் செங்குமுதந் தேன்பொ ழிந்த
செய்கையெனச் செந்திருவாய் மலர்ந்தன் பர்க்கு
வாசாம கோசரமாம் பொருளு ணர்த்தும்
மகாதேவ மூர்த்திபதம் வணங்கி வாழ்வாம்.



உ
சிவமயம்

# கோவிலூர் ஆதீனம் மடாலயத்தில் எழாவது பட்டத்தில் ஞானாசிரியராக எழுந்தருளியிருந்த ஸ்ரீலஸ்ரீ மகாதேவ ஞானதேசிக சுவாமிகள் அவர்கள் வரலாறு

ஆசிரியர்

மேற்படி ஸ்ரீலஸ்ரீ மகாதேவ ஞானதேசிக சுவாமிகளவர்களின்
மாணாக்கர்
மகா – கோவிந்த சுவாமிகள்

ஐம்பதாவது ஆண்டு குருபூஜை விழாவில்
வெளியிடப் பெற்றது

பதிப்பித்து வெளியிட்டோர்:

கோவிலூர் ஆதீனம் பனிரெண்டாவது பட்டம் ஸ்ரீலஸ்ரீ நாச்சியப்ப ஞானதேசிக சுவாமிகள் அவர்களின் ஆசியுடன் மேற்படி ஸ்ரீலஸ்ரீ மகா தேவ ஞானதேசிக சுவாமிகள் அவர்களின் பூர்வ ஆசிரம குடும்பத்தின் வழிவந்த தேவகோட்டை
வடு. சுப. அண. அ. குடும்பத்தினர்

12-07-97




கோவிலூர் ஆண்டவர் என வழங்கும்
ஸ்ரீலஸ்ரீ முத்துராமலிங்க ஞானதேசிகர்




ஸ்ரீலஸ்ரீ மகாதேவ ஞானதேசிக சுவாமிகள்



ஸ்ரீலஸ்ரீ நாச்சியப்ப ஞானதேசிக சுவாமிகள்

உ
சிவமயம்

ஸ்ரீலஸ்ரீ நாச்சியப்ப ஞானதேசிக சுவாமிகள்
கோவிலூர் ஆதீனம்

கோவிலூர்
(வழி) காரைக்குடி
பசும்பொன் மாவட்டம்
630 307

# ஆசியுரை

எல்லா உயர்வுகளுக்கும் மூலகாரணமாக விளங்கிய கோவிலூர் ஆண்டவர் என விளங்கும் ஸ்ரீலஸ்ரீ முத்துராமலிங்க ஞானதேசிகர் அவர்களால் கொற்றவாளீஸ்வரர் – திருநெல்லை அம்பாள் திருவருட் துணை கொண்டு கோவிலூர் மடம் துவங்கப் பெற்றுச் சீரும் சிறப்பும் பலபெற்று இயங்கி வருகிறது.

உண்மையான துறவுநிலை மேற்கொண்டவர்களே கோவிலூர் மடாதிபதியாக விளங்கியுள்ளனர். அவர்கள் வேதாந்த நூல்களை முறையாகக் கற்று, ஓதி உணர்த்திய பெருமையும் உண்டு. வேதாந்தத்தை வளர்ப்பது நம் பாரம்பரியமாகும்.

இத்தகைய சிறப்புடைய கோவிலூர் ஆதீனத்தின் ஏழாவது பட்டமேற்ற ஸ்ரீலஸ்ரீ மகாதேவ ஞானதேசிக சுவாமிகள் போற்றுதற்கு உரியவராக விளங்கியவர்கள் என்பது உள்ளங்கை நெல்லிக்கனி என விளங்குகிறது. அவர்கள் காலத்தில் சுமார் 300 மாணக்கர்களுக்கு மேல் வேதாந்தம் பயிற்றுவித்தது மிகப் பெரிய சாதனையாகும்.

மகாதேவஞான தேசிக சுவாமிகள், குருநாதருக்கு அன்புடைய மாணாக்கர்; தன் மாணாக்கருக்கு போற்றுதற்குரிய குருநாதர்; இத்தகைய சுவாமிகளின் ஐம்பதாவது குருபூஜை விழாவில் அவர்களுடைய வரலாறு குறித்த நூல் வெளிவருவது குறித்து பெரும் மகிழ்ச்சி அடைகிறோம்.

அவர்கள் வழியைப் பின்பற்றி நாமும், மடத்தில் ஈடுபாடு கொண்டவர்களும் நற்பணிகள் செய்வோமாக.

மகாதேவ ஞானதேசிக சுவாமிகள் தொண்டைப் பாராட்டுகிறோம். அவர்களின் வழிவந்த மரபினர் வளமும் நலமும் பெற்று வாழ்வாங்கு வாழக் கொற்றவாளீஸ்வரர் உடனாய திருநெல்லையம்மையின் திருவருளை வழுத்துகிறோம்.

ஓம் தத் ஸத்
ஸ்ரீ சற்குருநாதன் துணை

உ
சிவமயம்

அ. முத்தையா,
அ. நடராஜன்.
அ. சோம. மகாதேவன் (த/பெ. சோமையா)

28, பள. செ. ரோடு
தேவகோட்டை– 630 302
பசும்பொன் மாவட்டம்

# பதிப்புரை

ஸ்ரீலஸ்ரீ மகாதேவ ஞானதேசிக சுவாமிகள் அவர்கள் பூர்வாசிரமத்தில், எங்கள் தந்தையாரை, பெற்ற தகப்பனார் ஆவார்கள். அவர்கள் மரபில் நாங்கள் தோன்றியது எங்களின் பூர்வ புண்ணியமாகும். அவர்கள் கோவிலூர் மடத்தில், ஏழாவது பட்டமுடைய குருபீடம் ஏற்று, சுமார் 28 ஆண்டுகள் அருளாட்சி புரிந்து, 1947–ல் விதேக கைவல்லியமெய்தினார்கள்.

அவர்களின் வரலாறு எழுத வேண்டும் என்று எண்ணியபோது, அவர்களுடைய முதன்மை மாணாக்கராக விளங்கிய கொப்பமாபுரி மகா. கோவிந்த சுவாமிகள் அவர்களை, அப்போதைய மடாதிபதி கோவிலூர் ஆதீனம் 9–வது பட்டம் ஸ்ரீலஸ்ரீ இராமநாத ஞான தேசிகர் அவர்கள் ஆசியுடன் 1979–ல் அணுகிய போது, அவர்களும் மனமுவந்து ஒப்புக் கொண்டு தம் குருநாதரின் வரலாற்றினை மிகுந்த பக்தி சிரத்தையுடன் எழுதி தந்தார்கள்.

தற்போது 12–வது மடாதிபதியாக வீற்றிருக்கும் ஸ்ரீலஸ்ரீ நாச்சியப்ப ஞானதேசிக சுவாமிகள் அவர்கள் நம் மகாதேவ ஞானதேசிக சுவாமிகளிடம், மிகுந்த பக்தியும், ஈடுபாடும் கொண்டவர்கள். 5.7.95–ல் ஸ்ரீலஸ்ரீ சுவாமிகளின் 48–வது ஆண்டு குருபூஜை விழா அன்று அவர்கள் மடாதிபதியாக பொறுப்பு ஏற்றுக்கொண்டது இங்கு குறிப்பிட தக்கதாகும்.

இதற்கு பல வகையிலும் உதவி புரிந்த மகா பசுபதி சுவாமிகள், மகா முத்தையா சுவாமிகள், சோம.சொரூபானந்த சுவாமிகள், டாக்டர் சுப. அண்ணாமலை, புலவர் முத்து சண்முகம், கலாக்ஷேத்திரா பப்ளிகேஷன்ஸ் நிறுவனத்தார், அதன் மேலாளர் திரு எம். பழநி அவர்களுக்கும் எங்கள் நன்றி உரித்தாகுக.

வேணும்
ஸ்ரீ அண்ணாமலையார் துணை

உ
சிவமயம்

## கணபதி காப்பு

நேரிசை வெண்பா

பூமணக்கும் கோவிலூர் புண்ணியம டாலயத்தான்
நாமணக்கும் வேதாந்த நல்லிசையான் – தேமணத்தை
ஆக்கும் மகாதேவ ஆசான் சரிதமுறக்
காக்கும் கணபதியே காப்பு.

## கோவிலூர் மடாலய பஞ்சமூர்த்திகள் துதி

எழுசீர் ஆசிரிய விருத்தம்

வானவ ரசமாந் தொடர்பினா லுலகோர்
வழுத்துறும் வன்னியைங் கரனை
வானவ ரதன மணியறு முகனை
மாசறு கொற்றவா ளிறையை
வானவர் முதுவன் பாலன வலவன்
வணங்குநற் றிருநெலை மாதை
வானவ ரதனா முத்திரா மேச
வள்ளலை வணங்கி வாழ்த் திடுவாம்.

## அறுகுரவர் துதி

எழுசீர் ஆசிரிய விருத்தம்

பேர்மிகும் முத்தி ராமலிங் கேசர்
பிறங்கரு ணாசல குரவர்
சீர்மிகும் கருணா நிதியென வழங்கும்
சிதம்பர ஞானதே சிகனார்
தார்மிகும் இராம சாமிதே சிகனார்
தவமருள் வீரதே சிகனார்
நேர்மிகும் அண்ணா மலைக்குரு பரனார்
நிதமிவர் பதங்களைத் தொழுவாம்.

## ஸ்ரீலஸ்ரீ – மகாதேவ ஞானதேசிக சுவாமிகள் துதி

எழுசீர் ஆசிரிய விருத்தம்

பூதல மதனின் மாதவத்(து) அடியார்
பொருந்துவெம் பவத்துயர் அகன்று
பேதமின் ஞானப்-பிரமவா னந்தம்
பெறமிகும் கருணையாற் சிறந்த
ஆதர வோடும் அருமறை யந்தம்
ஆனமா வாக்கியம் உரைத்த
நாதனாம் குரவன் அருண்மகா தேவ
ஞானதே சிகன்தனைப் பணிவாம்.

# ஸ்ரீலஸ்ரீ மகாதேவ ஞான சுவாமிகள்அவர்கள் வரலாறு

## பாண்டி நாடு

பாண்டி வளநாடு தேவாரப்பாடல்கள் பெற்ற பதினான்கு திருத்தலங் களையும், மற்றும் பல திருத்தலங்களையும் தன்னிடத்தே கொண்ட சிறப்பினை உடையது; மற்றும் மகாதேவியாகிய மீனாட்சியம்மையாரால் அரசாட்சி புரியப் பெற்றதும், மகாதேவனாகிய சிவபெருமானால் அறுபத்து நான்கு திருவிளையாடல்கள் புரியப் பெற்றதும், புகழ்மிகுந்த செந்தமிழ்ச் சங்கம் அமையப் பெற்றதும் ஆன மதுரை மாநகரைத் தன்னிடத்தே கொண்ட சிறப்பினை யுடையது; மற்றும் உலகம் போற்றும் 'திருவாசகம்' என்னும் தெய்வத்திரு நூலை அருளிய மாணிக்கவாசக சுவாமிகள் திருஅவதாரம் செய்தருளிய திருவாதவூரைத் தன்னிடத்தே கொண்ட சிறப்பினையுடையது; மற்றும் பலசிறப்புக்களையும் உடையது.

## செட்டிநாடு

இத்தகைய சிறப்புக்கள் பலவும் வாய்ந்த பாண்டிவளநாட்டின் கிழக்குப் பகுதியில் சிறப்புற்று விளங்குவது, அறப்புகழ் மிகுந்த நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் என வழங்கும் தனவணிகர்களாகிய செட்டியார்கள் வாழ்கின்ற செட்டி நாடாகும். தனவணிகர்களாகிய செட்டியார்கள், முன்னாளில் சோழ வளநாட்டில் திருவெண்காடு என வழங்கும் காவிரிப்பூம்பட்டினத்தில் வசித்திருந்தார்கள். அங்குவசித்த உலகம் போற்றும் சிறப்புற்ற துறவியாகிய பட்டினத்து அடிகளின் வம்ச பரம்பரையினரான நகரத்தார்கள் பின்னாளில் பாண்டிய மன்னர்களின் வேண்டுகோளுக்கு இணங்கிப் பாண்டிவளநாட்டில் குடியேறினார்கள். அவர்கள் குடியேறிப் பெருகிய ஊர்களின் தொகை தொண்ணூற்றாறு வரை மிகுந்தது. அவ்வூர்களே நாளடைவில் தொண்ணூற்றாறூர் என்று வழங்குவதாயின. இத்தகைய தொண்ணூற்றாறூர் நகரத்தார்களாகிய தனவணிகப் பெருமக்கள், இயற்கையாகவே தெய்வ பக்தியும், ஆலயத் திருப்பணிகளாற்றும் அறச்செயல்களும் கொண்டு, இறைவன் திருவருள் மிகப்பெற்று, அருட்செல்வமும் பொருட் செல்வமும் மிகப்பெற்றவர்களாய் உலகப்புகழ் பெற்று சிறந்து விளங்கும் பெருமக்களாவார்கள்.

## தேவகோட்டை நகரம்

மேற்கூறிய தொண்ணூற்றாறூர்களில் ஒன்றாக உள்ளது தேவகோட்டை என்னும் சிறப்புமிகுந்த நகரமாகும். இந்த நகரமானது, இதன்கண் ஸ்ரீஉமாதேவியார் தங்கியிருந்து பரமனைப் பூஜித்து நற்பேறு பெற்றதால் தேவிகோட்டை எனவும், பெருமை மிக்க தேவர்கள் ஈசுவரனை வணங்கி

நற்றவமியற்றித் திருஞானச் செல்வத்தைப் பெற்றதால் தேவகோட்டை எனவும் புகழ்ப் பெயர் பெற்றுச் சிறந்து விளங்குகின்றது.

## தாய் தந்தையர்

மாட்சிமை மிகுந்த தனவணிகர் குலத்தில், மாத்தூர்க் கோவில் கருப்பூர்ப் பிரிவு கோத்திரத்தில், சுப்பிரமணியம் செட்டியார் என்னுந் திருநாமமுடைய செல்வர் வாழ்ந்திருந்தார். இவர் கல்வியறிவிலும், நல்லொழுக்கத்திலும், ஈசுவர பக்தியிலும் சிறந்து விளங்கிவந்தார். இவருக்கு வாழ்க்கைத் துணைவியாக அமைந்த மாது நல்லாளின் பெயர் சிட்டாளாச்சி என்பதாம். இவ்வம்மையார் "தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற, சொற்காத்துச் சோர்விலாள் பெண்" என்னுந் திருக்குறளுக்கோர் இலக்கியமாக அமைந்து நின்று, கணவருடன் இல்வாழ்க்கையை இனிது நடத்தியிருந்தார். இத் தம்பதிகளாகிய சுப்பிரமணியஞ் செட்டியாரும் சிட்டாளாச்சியாரும், தங்கட்கு இகச்செல்வத்திற்கு வேண்டிய செல்வமிருந்தும், சுகச் செல்வமாகிய மகச்செல்வமின்மையின் மனம் மிக நொந்து, நன்மக்கட்பேற்றை வேண்டி தாம் வழிபடுகடவுளாகிய திருஅண்ணாமலையாரை இடைவிடாது போற்றிப் பணிந்து வணங்கி வந்தனர்

## சுவாமிகள் தோற்றம்

சுப்பிரமணியஞ் செட்டியாரும் சிட்டாளாச்சியாரும் மிகுந்த பக்தியுடன் வேண்டிய வேண்டுகோளுக்குத் திருஅண்ணாமலை இறைவன் திருவுளமிரங்கி மகன் பிறக்க அனுக்கிரகம் செய்தருளினர். அவ்வனுக்கிரக வலியால், கருவிலே திருவுடைய நம் மகாதேவஞானதேசிக சுவாமிகள், குழந்தையாக இவ்வுலகில் தோன்றியருளினார்கள். இவ்வாறு தோன்றிய காலம் கலியுகாதி வருஷம் 4984க்குச் சரியான சித்திரபானு வருஷம், சித்திரை மாதம் 4 ஆம் தேதி (ஆங்கிலம் 1882 ஆம் வருஷம், ஏப்ரல் மாதம் 15 ஆம் தேதி) சனிக்கிழமை, கிரு ணபட்சம், துவாதசி திதி, பூரட்டாதி நக்ஷத்திரம் கூடிய சுபநாளில் உதயாதி நாழிகை 2 இல் பொருந்திய சிம்மலக்கின சுபகாலமாகும்.

## பிள்ளைத் திருநாமம்

தாய் தந்தையர்கள் தம் அருமைப்புதல்வர்க்குத் திருஅண்ணாமலை இறைவனின் திருவருளால் தோன்றிய காரணத்தால் "அண்ணாமலை" எனப் பிள்ளைத் திருநாமம் சூட்டி வளர்த்து வந்தனர்.

## கல்வி

சுவாமிகள் வளர்ந்து ஐந்து வயதையடைந்தார்கள். அப்போது தாய் தந்தையர்கள் தம்புதல்வராகிய நம் சுவாமிகட்குக் கல்விப் பயிற்சி செய்விக்க விரும்பி, நன்னாளில் நல்லோரையில் நல்லாசிரியரிடம் கல்வி கற்பிக்கத்

தொடங்கும் விழாவைச் சிறப்புறச் செய்து, கல்வி கற்கச் செய்தனர். சுவாமிகள் பதினைந்து வயதளவில் எல்லாக் கல்விகளையும் நன்கு கற்றுத் தேர்ச்சியடைந்தனர்.

### திரவியந்தேடல்

"திரைகடலோடியுந் திரவியந்தேடு" என்பது ஔவைப்பிராட்டியார் அருள்மொழி. இதன் பொருள், "அலைவீசுங் கடலைத் தாண்டிச் சென்றும் பொருளைத் தேடுவாயாக" என்பதாம். இத்தகைய அருள்வாக்குக்கும், தம் குலமரபுக்கும் இணங்கத் தந்தையாராகிய சுப்பிரமணியஞ் செட்டியார், தம்முடைய புதல்வர் திரைகடலோடியுந் திரவியந் தேடவேண்டுமென்று எண்ணினார். அவ்வெண்ணப் படியே தம் புதல்வராகிய நம் சுவாமிகளைக் கடல் கடந்து வாணிகத்திற்குச் செல்லும் சில தனவணிகப் பெருமக்களுடன் கூட்டியனுப்பினார். சுவாமிகளும் அவ்வாறே சென்று சில ஆண்டுகள் அங்குத் தங்கிப் பெரும்பொருள் தேடிக் கொண்டு திரும்பி வந்தனர்.

### சிவஞான வேட்கை

நம் சுவாமிகள் சிவானுக்கிரகத்தாற் பிறந்தமையின் சிவஞானத்தையடைய வேண்டுமென்ற இச்சை இயற்கையாகவே அமைந்து நாள்தோறும் பெருகலாயிற்று.

### திருமணம்

சுப்பிரமணியஞ் செட்டியாரும் அவருடைய தர்மபத்தினியாரும் தம் புதல்வர்க்குத் திருமணம் செய்விக்கத் தகுந்த வயது வந்ததை யறிந்து, திருமணம் செய்விக்க விரும்பித் தம் கருத்தைப் புதல்வரிடம் தெரிவித்தனர். அதற்கு நம் சுவாமிகள் தமக்குத் திருமணம் வேண்டாம் என்று அன்புடன் அறிவித்தனர். இவ்வாறு அறிவித்ததற்குக் காரணம் சிவஞானத்தையடைய வேண்டுமென்ற இச்சை அதிகமாக வளர்ந்து கொண்டிருந்ததேயாம்.

இவ்வாறு நம் சுவாமிகள் அறிவித்ததை அறிந்த தந்தையார் கவலையுற்றுத் தம் புதல்வரிடம், முன்னோர் காலத்திலிருந்து தொடர்ந்து வளர்ந்து வந்த நம் குலமரபு நின்னோடு முடிவுறல் சரியன்று. ஆகையால் திருமணம் செய்துகொண்டு இல்லறத்தை நல்லறமாக நடைபெறச் செய்ய வேண்டுமென்று மிகவும் வற்புறுத்திக் கூறினார். அவ்வற்புறுத்தலினால் தந்தையாரின் கவலையை அறிந்து, அக்கவலை நீங்க வேண்டுமெனவும், தந்தை மொழியை வேதமொழி யாகக் கருதவேண்டுமென்ற ஆன்றோர் வாக்கியத்திற்கிணங்க நடந்து கொள்வது அறச்செயலேயாகுமெனவும் நினைந்து, ஒருவாறு உடன்படலானார்.

அதன்பின்பு தந்தையார், அருந்ததியைப் போன்ற கற்பிற் சிறந்த அலமேலு ஆச்சி என்னும் பெயருடைய மாதுநல்லாளை, நன்முகூர்த்தத்தில் சிறப்புறத் திருமணம் செய்து வைத்தனர்.

## தாய் தந்தையர் மறைவு

பின்பு சில காலஞ்சென்று தாயுந்தந்தையும் முன்பின்னாகச் சிவபதம் அடைந்தார்கள். அன்னார்கட்குச் செய்ய வேண்டிய செய்கடன்கள் அனைத்தையும் நம்சுவாமிகள் சிறப்புறச் செய்து முடித்தனர்.

## இல்லறம் இயற்றல்

அதன்பின் அலமேலு ஆச்சியாருடன் வசிட்டர் முதலிய முனிவர்களைப் போன்று பற்றற்றமுறையில் இல்லறத் தருமத்தைச் சிறப்புற நடத்தி வந்தனர். அவர்கட்கு அண்ணாமலை என்ற ஒரு புத்திரரும், திருநெல்லை என்ற ஒருபுத்திரியும் பிறந்தனர்.

தந்தையாருக்கும் புத்திரருக்கும் வழிபடுகடவுளின் பெயராகிய "அண்ணாமலை" என்ற ஒரே பெயர் அமைக்க நேர்ந்துவிட்டதால், புத்திரருக்கு அண்ணாமலை என்ற பெயரோடு துணைப்பெயராகக் "காசி" என்ற இரண்டாவது பெயரும் வைத்து வழங்கினர்.

## சிவஞான வேட்கை மிகுதல்

அதன்பின் தனது தந்தையாரின் ஆணைப்படி இல்லறமியற்றல் முடிவு பெற்றது என்று திருவுளத்தில் கருதினார். முன்னே எண்ணியபடி சிவானுபூதி ஞானத்தையடைந்து, சர்வதுக்கநிவிர்த்தி பரமானந்தப் பிராப்தி வடிவ வீட்டின்பத்தைப் பெறவேண்டுமென்ற இச்சை தீவிரமாக வளர்ந்து, சிவஞான சாதனங்களான, நித்தியா நித்தியவஸ்து விவேகம், இகாமுத்திரார்த்த பல போகவிராகம் சமாதி சட்க சம்பத்தி, முமுட்சுத்துவம் என்னும் நான்கு சாதனங்களையும் அடைந்தார்.

## துறவும், குருவை அடைதலும்

அதன்பின்,

"ஆனபின் மனைவி மக்கள் அர்த்த ஏ டணைகள் மூன்றில்
கானவர் வலையிற் பட்டுக் கைதப்பி ஓடும் மான்போல்
போனவன் வெறுங்கையோடே போகாத வண்ணஞ் சென்று
ஞானசற் குருவைக் கண்டு நன்றாக வணங்கினானே"

என்று கைவல்லியநவநீத நூல் கூறுகின்ற விதியின்படி இல்லறத்தை விட்டுத் துறந்து, அதிவிரைவாக மகத்துவம் மிகுந்த வேதாந்த ஞானகுருபரம்பரை

அருளாட்சி புரியும் க்ஷமிவன க்ஷேத்திரமென்னும் கோவிலூர் மடாலயத்தை யடைந்து, அங்குள்ள பெரியோரின் துணைகொண்டு, அப்போது அங்கு ஐந்தாவது குருமூர்த்தமாக எழுந்தருளியிருந்த ஸ்ரீலஸ்ரீ – வீர சேகர ஞான தேசிக சுவாமிகளைக் கண்டு வணங்கித் துதித்து நின்றனர்.

## குருதீக்ஷையும், தீக்ஷா நாமமும்

குருநாதராகிய ஸ்ரீலஸ்ரீ – வீரசேகர ஞானதேசிக சுவாமிகள், தமக்கு முன்பு வணங்கித் துதித்து நின்ற அன்பரின் மிகுதியான பக்தி சிரத்தையை அறிந்து, அவரை அன்புடன் நோக்கி, "நீ யார்? இங்கு யாது கருதி வந்தனை?" என வினாவினர்.

அவ்வினாவிற்கு விடையாக, அன்பர் "அடியேன் தேவகோட்டை என்னும் ஊரில் தோன்றிய வைசியச் சிறுவன்; அளவிலாத் துன்புடைய பிறவிக் கடலில் ஆழ்ந்து மிகவும் சோகத்தையடைந்தேன்; ஆதலால் அத்துன்பக் கடலினின்றும் கரையேற அனுக்கிரகஞ் செய்யவேண்டும்" என்று பணிவுடன் விண்ணப்பஞ் செய்து கொண்டனர்.

இவ்வாறு விண்ணப்பஞ் செய்து கொண்டதை அறிந்த ஸ்ரீலஸ்ரீவீரமா முனிவர், மேலான சச்சிதானந்த வடிவ பிரம்ம ஞானத்தை அடைவதற்குரிய சாதனங்கள் அனைத்தும் உடைய ஞான அதிகாரம் (ஞானத்திற்கு உரிய தகுதி) அன்பரிடம் அமைந்திருப்பதை யறிந்து,

"அன்னதன் சிசுவை ஐயன் ஆமைமீன் பறவை போலத்
தன்னகங் கருதி நோக்கித் தடவிச்சந் நிதியி ருத்தி"

என்று கைவல்லிய நவநீத நூலில் கூறியிருப்பது போல, அனைத்து தீக்ஷைகளையும் செய்து * பூர்வ ஆசிரமத்தில்

** தீக்ஷை என்பது தீக்கை எனவும் வழங்கப்பெறும், தீக்கை என்பதன் பொருள், குருவானவர் சீடர்களின் மும்மலங்களாகிய, தீவினையென்னும் பாபகன்மம், விக்ஷேபம் என்னும் சித்த சஞ்சலம், ஆவரணம் என்னும் அஞ்ஞானம் ஆகிய மூன்றையும் தீயச்செய்து, அவர்களின் மனத்தை அவர்களது யதார்த்த சொரூபமாகிய சச்சிதானந்த ஆன்மப்பிரம்ம சொரூபத்தில் செலுத்துதல் என்பதாம்.*

*இத்தகைய தீக்கை நான்குவிதமாம். அவை: 1. மானசதீக்கை, 2. சட்சுதீக்கை, 3. பரிசதீக்கை, 4. வாசகதீக்கை என்பனவாம். அவற்றுள் முதல் மூன்றின் விளக்கங்கள் மேலே கூறப்பெற்றன. நான்காவதாகிய வாசகதீக்கை என்பது, சீடன் அஞ்ஞானம் முற்றும் ஒழிந்து, திட அபரோக்ஷசாக்ஷாத்கார ஞானம் அடைந்து, தனது யதார்த்த சொரூபமாகிய ஆத்மப்பிரம்ம சொரூபமாக நிலைப்பதாகிய, சர்வதுக்க நிவிர்த்தி பரமானந்தப் பிராப்தி வடிவமோக்ஷத்தை யடையும்படி குருவானவர் தமது வாக்கினால் மகாவாக்கியார்த்த உபதேசம் கூறுதலாம்.*

வைத்திருந்த அண்ணாமலை என்ற நாமத்தை மாற்றி * "மகாதேவ சுவாமி" என்ற தீக்ஷாகால நாமத்தை வழங்கி இருக்கச் செய்தனர்.

## குருபணி செய்தல்

அதன்பின் தமது குருமூர்த்தியாகிய ஸ்ரீலஸ்ரீ வீரமாமுனிவரிடத்தில் மிகுந்த பக்தி சிரத்தையுடன் 1. ஆத்தம் (அதாவது ஆப்தம்–குருநாதனுக்கு அனுகூலமான பணிவிடைகளைச் செய்தல்), 2. அங்கம் (அதாவது குருநாதனுக்குக் கால் கழுவுதல், துணி தோய்த்தல் முதலிய குற்றேவலைச் செய்தல்). 3. தானம் (அதாவது ஸ்தானம்–குருநாதனுக்குரிய மடம் நிலம் முதலியவற்றைப் பாதுகாத்தல்) 4. சத்பாவம் (அதாவது குருநாதனே பிரத்தியக்ஷமாகக் கண்ட பரமசிவம் என்று நம்புதல்), என்னும் நான்கு விதமான எல்லாப் பணிவிடைகளையும் (தம் குருநாதனுக்கு) மிகவும் அன்பு உண்டாகும்படி சிறப்பாகச் செய்து கொண்டிருந்தனர்.

## 16 நூல்களை உபதேசமாகக் கேட்டல்

ஸ்ரீலஸ்ரீ வீரசேகர ஞானதேசிக சுவாமிகள் வாசக தீக்ஷையாகிய, வேதாந்த மகாவாக்கியார்த்தம் கூறும் 16 நூல்களை உபதேசப் பாடமாகக் கூறுதலும், மகாதேவ சுவாமிகள் அவற்றைச் சிரத்தையுடன் கேட்டுத் தாரணை செய்தலும்

பின்பு ஸ்ரீலஸ்ரீ வீரசேகர ஞான தேசிக சுவாமிகள் மகாதேவ சுவாமிகளிடத்தில் மிகவும் அன்பு கொண்டு, ஆங்குள்ள மரபின் முறைப்படி வேதாந்த நூல்களாகிய 1. நாநாஜீவ வாதக் கட்டளை, 2. கீதாசாரத் தாலாட்டு, 3. சசிவன்னபோதம், 4. மகாராஜா துறவு, 5. வைராக்கிய சதகம், 6. வைராக்கிய தீபம், 7. இலக்ஷணாவிருத்தி, 8. அஞ்ஞவதைப் பரணி, 9. விவேக சூடாமணி, 10. வேதாந்த சூடாமணி, 11. கைவல்லிய நவநீதம், 12. பஞ்சதசி, 13. ஈசுர கீதை, 14. பகவத்கீதை, 15. பிரம்மகீதை, 16. ஞானவாசிட்டம் என்னும் பதினாறு நூல்களையும் இனிய கருணையுடன் உரிய காலங்களில் முறையாகப் போதித்தருளினர். மகா தேவசுவாமிகள் மிகவும் சிரத்தையுடன் மேற்கூறிய பதினாறு நூல்களையும் பாடங்கேட்டுத் தாரணை செய்தனர்.

## இரண்டாம் முறை பாடங்கேட்டல்

கோவிலூர் குருமரபின் முறைப்படி முதல் பாடம் ஒவ்வொன்றிற்கும் இரண்டாம் பாடம் கேட்க வேண்டும் என்ற சம்பிரதாயப்படி, மேற்படி கோவிலூர்

* *"ஸ்ரீலஸ்ரீ மகாதேவஞானதேசிக சுவாமிகள்" என்னும் நாமம் முதலில் திருவண்ணாமலை ஈசானிய மடாலயத்தில் குருமூர்த்தமாக எழுந்தருளிய காலத்தில் ஏற்பட்டதாகும்.*

வேதாந்த மடத்தில் பின்னாளில் 6 – வது குருமூர்த்தமாக எழுந்தருளியிருந்த ஸ்ரீலஸ்ரீ அண்ணாமலை ஞானதேசிக சுவாமிகளிடத்தில் முறையாக அந்தப் பதினாறு நூல்களையும் இரண்டாம் பாடமும் கேட்டு பூர்த்தி செய்தனர்.

## ஞானவாசிட்டம் ஏடுவாங்குதல்

பின்பு கோவிலூர் குருமரபின் வழக்கத்தின்படி, வாசிட்டம் ஏடுவாங்கும் விழாவை ஆரம்பித்து, தமது குருமூர்த்தியாகிய ஸ்ரீலஸ்ரீ வீரசேகரஞான தேசிக சுவாமிகளை உயர்ந்த பீடத்தில் அமரும்படி வேண்டி, அவர்கள் அமர்ந்தபின் அவர்களது திருப்பாதங்களுக்குப் பஞ்சாமிர்தம், நெய், பால், தயிர், தேன், பழச்சாறு, இளநீர், சந்தனம், பன்னீர், விபூதி, கும்பதீர்த்தம் ஆகியவைகளை அபிஷேகஞ் செய்து, நீர் துவட்டி, அவர்களது திருமேனியில் பு ப மாலைகள், பட்டு முதலியவைகளைச் சாத்தி அலங்காரஞ் செய்து, தூப, தீப, நைவேத்தியம், கற்பூர தீபம் அர்ச்சனை ஆகியவைகளால் ஆராதனை செய்வதாகிய பூசனைகள் புரிந்து, குரு ஸ்தோத்திரங்களால் துதிகள் புரிந்தபின், குரு மூர்த்தியாகிய அவர்களது முன்னிலையில் வைத்த ஞானவாசிட்ட நூலை அவர்களது திருக்கரங்களால் எடுத்து ஆசீர்வாதஞ் செய்து கொடுக்கத் தாம் பக்தி சிரத்தையுடன் பெற்றுக் கொண்டனர். மாணாக்கர்கள் ஏடு வாங்குவது என்பது, வேதாந்தத்தை முழுமையாக உணர்ந்ததற்கு அறிகுறியாகும், மற்றும் வாசிட்டம் வரைக்கும் பாடங்கேட்டு முடிவு செய்தபின் மாணாக்கர் தம் குருமூர்த்திக்கு ஆராதனை செய்து மரியாதையுடன் நன்றியறிவிக்கும் விழாவும் ஆகும்.

## தமது குருமூர்த்தியாகிய ஸ்ரீலஸ்ரீ வீரசேகர ஞானதேசிக சுவாமிகள் செய்யும் திருப்பணிகளுக்கு அனுகூலமான பணிகளைத் தாம் செய்து கொண்டிருத்தல்

அப்போது ஸ்ரீலஸ்ரீ வீரசேகர ஞானதேசிக சுவாமிகள் அவர்கள் கோவிலூர் மடாலயம், ஸ்ரீ திருநெல்லையம்பாள் சமேதஸ்ரீ கொற்றவாளீசுவரர் ஆலயம் முதலியவற்றின் சிறப்புத் திருப்பணிகளையும் கும்பாபிஷேகத்தையும் செய்து, பிரம்மோற்சவங்களையும் நடத்திக் கொண்டிருந்தனர். பின்பு திருக்களர் ஸ்ரீ அமிர்தவல்லியம்பாள் சமேத ஸ்ரீபாரி ஜாதவனேசுவரர் ஆலயத்தின் சீரமைப்புத் திருப்பணியையும் கும்பாபிஷேகத்தையும் சிறப்புடன் செய்து முடித்து, பிரம்மோற்சவத்தை நடத்த ஏற்பாடுகள் செய்து கொண்டிருந்தனர். அத்தகைய திருப்பணிகள், கும்பாபிஷேகங்கள், உற்சவங்கள் முதலியவை நடைபெறச் செய்யும் பணிகளுக்கு அனுகூலமான பலபணிகளையும், ஸ்ரீலஸ்ரீ மகாதேவ ஞானதேசிக சுவாமிகள், ஸ்ரீலஸ்ரீ அண்ணாமலை ஞானதேசிக சுவாமிகளுடனும், மற்றும் பல அடியார்கள் அன்பர்களுடனும் சேர்ந்து, பக்தி சிரத்தையுடன் செய்து கொண்டு தமது குருமூர்த்தியின் ஆசிபெற்றிருந்தனர்.

## ஸ்ரீலஸ்ரீ வீரசேகர ஞானதேசிக சுவாமிகள் விதேகமுக்தி

ஸ்ரீலஸ்ரீ வீரசேகர ஞானதேசிக சுவாமிகள் முன்கூறியபடி திருக்களர் ஆலயத்தின் சீரமைப்புத் திருப்பணியையும் கும்பாபிஷேகத்தையும் சிறப்புடன் செய்து முடித்து, வைகாசி விசாகநக்ஷத்திர நாளில் பிரம்மோற்சவ ரதோற்சவத்தைச் சிறந்த ஏற்பாடுகளுடன் நடத்தினர். அவ்வாறு பிரம்மோற்சவம் நடைபெற்ற பத்தாம் நாள் (ரதோற்சவம் நடைபெறும் போது), தமது அறுபத்து மூன்றாவது வயது நிறைவுறுவதாகிய, விரோதி கிருது வருஷம், வைகாசி மாதம் 27 ஆம் நாள் (ஆங்கிலம் 1911 ஆம் வருஷம் ஜுன் மாதம் 8 ஆம் நாள்) தெற்கு வீதியில் நடராஜப் பெருமான் சன்னிதியும் பிரம்மதீர்த்தக் கரையும் ஆகிய முக்திஸ்தானத்தில் ஸ்ரீபாரிஜாதவனேசரின் திருத்தேரின் முன்நின்று ஆனந்த நிருத்தனத்துடன், "மகாதேவா" என்ற மந்திரத்தைப் பலமுறை உச்சரித்துத் தமது ஜீவன் முத்திநிலையை நீத்து, விதேகமுக்தியை யடைந்து பரிபூரண சச்சிதானந்த சிவவடிவமாக நிலைத்தனர்.

## ஸ்ரீலஸ்ரீ அண்ணாமலை ஞானதேசிகசுவாமிகள் கோவிலூர் மடாலயத்தில் ஆறாம்பட்டமுடைய குருபீடாதிபதியாக அமர்தல்

பின்பு ஸ்ரீலஸ்ரீ அண்ணாமலை ஞானதேசிக சுவாமிகள் ஆறாம்பட்டமுடைய குருபீடாதியாக, ஸ்ரீலஸ்ரீ வீரமாமுனிவர் விதேக முக்தியடைந்த காலத்திற்குப் பிற்காலம் முதல் அமர்ந்து மடாலய பரிபாலன காரியங்கள் அனைத்தையும் சிறப்புறச் செய்து கொண்டிருந்தார்கள். அக்காலத்தில் பின்னாளில் எட்டாம் பட்டம் ஏற்ற ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர ஞானதேசிக சுவாமிகள், புனவாசல் மகேசுவரானந்த சுவாமிகள், புனவாசல் கணபதி சுவாமிகள், திருக்களர் சண்முக சுவாமிகள், குச்சனூர் ஆறுமுக சுவாமிகள், துறையூர் பெருமாள் சுவாமிகள் முதலிய பல சாதுக்கள் வந்து அவர்களது சன்னிதியில் சரணாகதியடைந்தனர். அவர்கட்கு நாநாஜீவவாதக்கட்டளை முதல் ஞானவாசிட்டம் வரையுள்ள வேதாந்த சாத்திர உபதேச பாடங்களை முறைப்படி நடத்தி, ஞானவாசிட்ட பாடம் நிறைவு பெற்றவர்கள், வாசிட்டம் ஏடுவாங்கும் விழாவையும் சிறப்புற நடைபெறச் செய்தார்கள்.

கோவிலூரில் 11 நாள் ஆடிப்பூரத்திருவிழா நடந்த போது, பேரவை (சதஸ்) கூட்டி காலை மாலை இருவேளையும், பல அறிஞர்களையும் கலைஞர்களையும் அழைத்துப் பங்குபெறச் செய்து, அவர்கட்கு வேண்டிய உபசாரங்களை மிகவும் வழங்கி அறிவுரைகளை வழங்க செய்து, அறிவுப்பயிர் எங்கும் தழைக்க வழிசெய்தனர்.

## ஸ்ரீலஸ்ரீ மகாதேவ ஞானதேசிக சுவாமிகள் திருவண்ணாமலை ஈசானிய மடாலயத்தின் குருபீடாதிபதி யாதல்

பின்பு ஸ்ரீலஸ்ரீ அண்ணாமலை ஞானதேசிக சுவாமிகள், ஸ்ரீலஸ்ரீ மகாதேவ ஞானதேசிக சுவாமிகளைத் திருவண்ணாமலை ஈசானியமடாலயத்தின் குருமூர்த்தமாக அங்குள்ள ஆசார முறைப்படி நியமனஞ்செய்து, அதற்கு முன் ஸ்ரீ மகாதேவ சுவாமிகள் என்னும் நாமம் வழங்கி வந்ததை, அன்று முதல் ஸ்ரீலஸ்ரீ மகாதேவ ஞானதேசிக சுவாமிகள் என்ற நாமமாக அமைத்து வழங்கும்படி செய்து, அம்மடாலய பரிபாலனமும் வேதாந்த சாத்திர உபதேச பாடங்களும் நடத்தி வருமாறு அன்புடன் கூறி அமைத்தனர்.

ஸ்ரீலஸ்ரீ மகாதேவ ஞானதேசிக சுவாமிகள் தனித்திருந்து தியானஞ் செய்ய விருப்பமுள்ளவராய், மடாதிபதி பதவியை ஏற்க விருப்பமில்லாதவராய் இருந்தும், ஸ்ரீலஸ்ரீ அண்ணாமலை ஞானதேசிக சுவாமிகளின் வற்புறுத்தலினால் சம்மதித்து அமர்ந்தனர்.

## ஸ்ரீலஸ்ரீ மகாதேவ ஞானதேசிக சுவாமிகள் திருவண்ணாமலை ஈசானிய மடாலய பரிபாலனம் செய்தல்

ஸ்ரீலஸ்ரீ மகாதேவ ஞானதேசிக சுவாமிகள் திருவண்ணாமலை ஈசானிய மடாலயத்தில் குருமூர்த்தமாக எழுந்தருளியிருந்து சிறந்த முறையில் பரிபாலனம் செய்து கொண்டிருந்தார்கள். அப்போது, அங்கு தம்மை வந்து சரணாகதியடைந்த நடேச சுவாமிகள், வேலாயுத சுவாமிகள் முதலிய பல மாணாக்கர்களுக்கு வேதாந்த நூல்களாகிய நாநாஜீவவாதக் கட்டளை முதலிய முறையான நூல்களை, உபதேசபாடமாகப் போதனை செய்து கொண்டிருந்தனர். மற்றும் ஸ்ரீலஸ்ரீ ஈசானிய ஞானதேசிகர் ஆலய பூஜையாதிகளையும் சிறப்புற நடைபெறச் செய்து கொண்டிருந்தனர்.

## ஸ்ரீரமண சுவாமிகள் திருவண்ணாமலைக்கு வந்த ஆரம்ப காலத்தில் ஈசானிய மடாலயத்திற்கு வருதலும் நமது சுவாமிகள் உபசரித்தலும்

மேற்கூறியவாறு ஈசானிய மடாலயப் பரிபாலனம் செய்து கொண்டிருந்த காலத்தில், திருவண்ணாமலையில் பிற்காலத்தில் பெரிய மகானாக விளங்கிக் கொண்டிருந்த பகவான் என்னும் ஸ்ரீலஸ்ரீ ரமணமகரிஷியவர்கள், திருவண்ணாமலைக்கு வந்த ஆரம்பகாலத்தில் அடிக்கடி ஈசானிய மடாலயத்திற்கு வந்து நமது குருமூர்த்தியாகிய ஸ்ரீலஸ்ரீ மகாதேவஞான தேசிக சுவாமிகளைச் சந்தித்து சிறிதுநேரம் வேதாந்த ஞானவிஷயங்களைக் குறித்துச்

சம்பாஷணைகள் செய்துவிட்டு, நமது சுவாமிகளின் உபசாரங்களைப் போற்றி அவ்விடமே கைப்பிச்சையும் ஏற்று உண்டு திருப்தியடைந்து செல்வார்கள்.

ரமண மகரிஷிகள் தியான நிஷ்டையில் ஈடுபட இடம் வேண்டிய நிலையில், நமது மகாதேவ சுவாமிகள், பூர்வாசிரமத்தில் தனது சகோதரியாக விளங்கிய விசாலாட்சி ஆச்சி அவர்களின் பொருளுதவியால், திருவண்ணாமலை குகை நமசிவாயர் ஆசிரமத்துக்கு மேற்கில் உள்ள கந்தாஸ்ரமத்தை அமைத்து கொடுத்தார்கள். இதுவிபரம் "எனது நினைவுகள்" என்ற ரமணாஸ்ரமம் குஞ்சு சுவாமிகளின் நூலில் குறிப்பிடப்பட்டுள்ளது.

## கோவிலூர் மடாலயத்திற்கு வருதல்

திருவண்ணாமலை ஈசானிய மடாலய பரிபாலனநிகழ்ச்சிகள் இவ்வாறு இருக்க, கோவிலூர் மடாலயத்தில் ஆறாவது குருமூர்த்தமாக எழுந்தருளியிருந்த ஸ்ரீலஸ்ரீ அண்ணாமலை ஞானதேசிக சுவாமிகள், தமக்குச் சீவன் முத்தித்தசை நீங்கி விதேகமுக்தியடையும்தசை நெருங்கி வருவதை உணர்ந்து, திருவண்ணாமலை ஈசானிய மடாலயத்திலிருந்த ஸ்ரீலஸ்ரீ மகாதேவஞான தேசிக சுவாமிகளை விரைவாக வரும்படி அழைப்பித்தார்கள். அவ்வழைப்பிற்கிணங்கி ஸ்ரீலஸ்ரீ மகாதேவ ஞானதேசிகசுவாமிகள் விரைவாகக் கோவிலூர் மடாலயத்திற்கு வந்து சேர்ந்து, ஸ்ரீலஸ்ரீ அண்ணாமலை ஞானதேசிக சுவாமிகளைத் தரிசனம் செய்தார்கள். அப்போது ஸ்ரீலஸ்ரீ அண்ணமலை ஞானதேசிக சுவாமிகள், ஸ்ரீலஸ்ரீ மகாதேவஞானதேசிக சுவாமிகளை நோக்கிக் கோவிலூர் மடாலயத்தின் குருஸ்தானத்தை இனிமேல் பரிபாலனம் செய்யத் தகுந்த சிறப்புக்கள் உள்ளவர் தங்களைத் தவிர இப்போது வேறொருவருமில்லை. ஆதலால் தாங்கள் குருஸ்தானத்தை ஏற்றுப் பரிபாலனஞ் செய்து வரவேண்டும் என்று வற்புறுத்திக் கூறினார்கள். அவ்வற்புறுத்தலை மறுக்கமுடியாமல் ஏற்றுக் கொண்டனர்.

## ஸ்ரீலஸ்ரீ அண்ணாமலை ஞானதேசிக சுவாமிகள் தமக்குப் பின் ஏழாம் பட்டத்தை ஏற்று இருக்கத்தக்க ஞானாசாரியரின் நியமன உறுதிமுறி (உயில்சாசனம்) ஏற்படுத்தல்

பின்பு கலியுகாதி வருஷம் 5020க்குச் சரியான சித்தார்த்தி வருஷம், சித்திரை மாதம், 28 ஆம் நாள் (ஆங்கிலம் 1919 ஆம் வருஷம், மே மாதம், 10 ஆம் நாள்) சனிக்கிழமையன்று ஸ்ரீலஸ்ரீ மகாதேவ ஞானதேசிக சுவாமிகள் ஏழாவது குருமூர்த்தியாக இருக்கும் முறையில் உயில் சாசனம் எழுதி வைத்தனர்.

## ஸ்ரீலஸ்ரீ அண்ணாமலை ஞானதேசிக சுவாமிகள் விதேகமுக்தி

பின்பு கலியுகாதி வருஷம் 5020 க்குச் சரியான, சித்தார்த்தி வருஷம் வைகாசி மாதம், 8 ஆம் நாள் (ஆங்கிலம் 1919 ஆம் வருஷம், மே மாதம் 21 ஆம் நாள்) புதன் கிழமை, கிருஷ்ண பக்ஷம், ஷஷ்டி திதி, சிம்ம லக்கினம், திருவோண நக்ஷத்திரம் கூடிய சுப நாளில், பகல் ஒரு மணிக்கு ஸ்ரீலஸ்ரீ அண்ணாமலை ஞானதேசிக சுவாமிகள் தமது ஜீவன்முத்தித் தசையை நீத்து விதேக முக்தியை அடைந்து, பரிபூரண சச்சிதானந்த சிவ வடிவமாக நிலைத்தனர்.

## ஸ்ரீலஸ்ரீ மகாதேவ ஞானதேசிக சுவாமிகள் கோவிலூர் மடாலயத்தில் ஏழாம் பட்டமுடைய குருபீடாதிபதியாக அமர்தல்

பின்பு ஸ்ரீலஸ்ரீ மகாதேவ ஞான தேசிக சுவாமிகள் 7 ஆம் பட்டமுடைய குருபீடாதிபதியாக, ஸ்ரீலஸ்ரீ அண்ணாமலை ஞானதேசிக சுவாமிகள் விதேகமுக்தியடைந்த காலத்தின் பிற்காலம் முதல், அதாவது கலியுகாதி வருஷம் 5020 க்குச் சரியான சித்தார்த்தி வருஷம், வைகாசி மாதம், 8 ஆம் நாள் (ஆங்கிலம் 1919 ஆம் வருஷம், மே மாதம், 21 ஆம் நாள்) புதன் கிழமை பிற்பகல் முதல் அமர்ந்தருளினார்கள்.

## வேதாந்த சாத்திர உபதேச பாடங்கள் நடத்தல்

அதன்பின் அன்று முன் இரவு சம்பிரதாய முறையில் நடைபெறவேண்டிய வேதாந்த சாத்திர பாடத்தை நடத்த ஆரம்பித்து, ஸ்ரீலஸ்ரீ அண்ணாமலை ஞானதேசிக சுவாமிகள் தம்காலத்தில் முறையாகப் பாடம் நடத்தி வந்து, வைராக்கிய சதகம் பாடம் நடத்துகையில் பாடம் நிறைவு பெறாமல் எஞ்சியிருந்த பாடத்தைப் பின்பு எட்டாம்பட்டம் ஏற்ற ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தரஞானதேசிக சுவாமிகள் முதலிய பல மாணாக்கர்கட்குச் சிறப்பாக உபதேசித்து, இரண்டாம் பாடம் ஸ்ரீலஸ்ரீ–வீர–கணபதி சுவாமிகளை நடத்தும்படி செய்து முடித்து, அதன்பின்பு நடைபெறவேண்டிய கிரமமான வாசிட்டம் வரையுள்ள நூல்களின் பாடங்களையும் சிறப்புற நடத்தி, வாசிட்டம் ஏடுவாங்கும் விழாவையும் சிறப்புற நடைபெறச் செய்தனர்.

## ஸ்ரீலஸ்ரீ மகாதேவ ஞானதேசிக சுவாமிகளின் அருளாட்சி காலத்தில் மாணவர் தொகை மிகுதலும், வாசிட்ட ஏடுவழங்கும் விழாவின் எண்ணிக்கையும்

கோவிலூர் மடாலயத்தில் அதிகமான அடியார்கள் வசித்துப் பாடம் கேட்டுவந்தது ஐந்தாவது குருமூர்த்தமாகிய ஸ்ரீலஸ்ரீ வீரசேகர ஞானதேசிக

சுவாமிகள் காலத்திலும், ஏழாவது குருமூர்த்தமாகிய ஸ்ரீலஸ்ரீ மகாதேவ ஞானதேசிக சுவாமிகள் காலத்திலும் தான் என்று சொல்லலாம். மேற்கூறிய ஏழாவது குருமூர்த்தியின் காலத்தில் அடியார்களின் தொகை கொஞ்சம் அதிகமாகவே இருந்ததாகவும் சொல்லலாம்.

மேற்கூறிய 16 நூல்களையும் கிரமமாகப் பாடம் கேட்டுப் பூர்த்தி செய்வதென்றால் சுமார் 12 ஆண்டுகள் ஆகலாம். 5 ஆம் குருமூர்த்தமாகிய ஸ்ரீலஸ்ரீ வீரசேகர ஞானதேசிக சுவாமிகள் ஏழுமுறை கிரமமாகப் பாடம் நடத்தி வாசிட்டம் வரை பூர்த்தி செய்து வாசிட்டம் ஏடு வழங்கும் விழாவைப் பூர்த்தி செய்திருக்கின்றனர். 7 ஆம் குருமூர்த்தமாகிய ஸ்ரீலஸ்ரீ மகாதேவஞானதேசிக சுவாமிகளும் மேற்கூறிய கிரமப்படி ஏழுமுறை கிரமமாகப் பாடம் நடத்தி வாசிட்டம் வரை பூர்த்தி செய்து வாசிட்டம் ஏடுவழங்கும் விழாவைப் பூர்த்தி செய்திருக்கின்றனர்.

## ஸ்ரீலஸ்ரீ மகாதேவ ஞானதேசிக சுவாமிகளிடம் சந்நியாசம் பெற்ற நகரத்தார்களாகிய மாணாக்கர்கள்

1. தேவகோட்டை, ஜமீன்தார் சுவாமிகள் (காளையார் கோவில்)
2. கோனாபட்டு, சிவானந்த சுவாமிகள் (சிவா பழநியப்பா)
3. ஆத்தங்குடி, அருணாசல சுவாமிகள் (பில்லமங்கலம்)
4. கோட்டையூர், அழகப்ப சுவாமிகள் (கோவிலூர்)
5. பட்டமங்கலம், அடைக்கப்ப சுவாமிகள்.
6. பள்ளத்தூர், முத்துவீரப்ப சுவாமிகள் (கோவிலூர்)
7. கீழப்பூங்குடி, சேவுக சுவாமிகள்.
8. கீழப்பூங்குடி, (சுப–சேவு) சொக்கலிங்க சுவாமிகள்.

## ஸ்ரீலஸ்ரீ மகாதேவஞான தேசிகசுவாமிகளின் கோவிலூர் மடாலயத்தின் பரிபாலனம்

கோவிலூர் மடாலயத்தில் செய்யத்தக்க சில சீர்திருத்தத் திருப்பணிகளையும், சில சிறப்புத் திருப்பணிகளையும் சிறப்புறச் செய்து முடித்தனர். கோவிலூர் மடாலயத்திற்குரிய சாணானேந்தல் என்னும் கிராமத்தில் பத்தாயிரம் ரூபாய் வரை செலவு செய்து மடம், நெற்களஞ்சியம் முதலிய பணிகளை இயற்றிக் கிராம வருமானம் மிகுதியாக வரும்படியான ஏற்பாடுகளையும் செய்து முடித்தனர். ஸ்ரீலஸ்ரீ ஆண்டவர் கோவில் பூஜை

முதலியவைகளையும், வேதாந்த சாத்திர உபதேச பாடங்களையும், சாதுக்களின் பரிபாலனத்தையும் யாவரும் போற்றும் வண்ணம் மிகவும் சிறப்பாக நடைபெறச் செய்து கொண்டிருந்தனர். ஆகார நேரங்களில் சாதுக்களும், நகரத்தார்களும், அனைவரும் உணவு அருந்தினார்களா? என்று மிகவும் கவனித்து விசாரித்து, அனைவரும் உணவு அருந்தும்படி ஏற்பாடு செய்வார்கள்.

## நூல்கள் வெளியீடு செய்தல்

சிதம்பரம் ஸ்ரீலஸ்ரீ பொன்னம்பல ஞான தேசிக சுவாமிகளால் உரையியற்றப் பெற்ற கைவல்லிய நவநீதம் ஆறாம் பதிப்பு நூலை 1941 ஆம் ஆண்டில் சிதம்பரம் ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர ஞானதேசிக சுவாமிகள் அச்சிட்டு வெளியிடும்படி செய்தார்கள். அத்வைத சாஸ்திர மான்மிய சங்கிரகம், கைவல்லிய உபநிஷதார்த்தம், திருவாசகம் சில பகுதிகள், பட்டினத்தார் பாடல் என்னும் சிறு நூல்களையும் அச்சிட்டு வெளியீடு செய்தார்கள்.

## ஸ்ரீலஸ்ரீ மகாதேவ ஞானதேசிக சுவாமிகளின் அருளாட்சிக் காலத்தில் கிளைமடங்களின் ஆட்சி

நமது குருமூர்த்திகளாகிய ஸ்ரீலஸ்ரீ மகாதேவ ஞானதேசிக சுவாமிகளின் அருளாட்சிக் காலத்தில், சிக்கல் பொருள்வைத்தசேரி ஸ்ரீலஸ்ரீ உகந்தலிங்க ஞானதேசிக சுவாமிகள் மடாலயத்திற்கு, அகிலாண்டபுரம் ஸ்ரீலஸ்ரீ–வீர–சண்முக சுவாமிகளையும், சிதம்பரம் ஸ்ரீலஸ்ரீ–கோ–சித–பொன்னம்பல ஞானதேசிக சுவாமிகள் மடாலயத்திற்கு, பின்னாளில் கோவிலூர் மடாலயத்தின் 8 ஆம் பட்டம் ஏற்ற ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தரஞானதேசிக சுவாமிகளையும், திருவண்ணாமலை ஸ்ரீலஸ்ரீ ஈசானிய ஞானதேசிக சுவாமிகள் மடாலயத்திற்கு, ஸ்ரீலஸ்ரீ நடேசஞானதேசிக சுவாமிகளையும், திருக்களர் ஸ்ரீலஸ்ரீ–வீரசேகர ஞானதேசிக சுவாமிகள் மடாலயத்திற்கு, ஸ்ரீலஸ்ரீ–கிரு ணானந்த சுவாமிகளையும் தலைவர்களாக நியமனஞ் செய்து எல்லா மடங்களின் பரிபாலனங்களும் சிறப்பாக நடைபெறும்படி செய்தார்கள்.

திருக்களரில் தமது குருமூர்த்தியாகிய ஸ்ரீலஸ்ரீ வீரமாமுனிவரின் சமாதியாலயத்திற்கு ஐம்பதாயிரம் ரூபாய் வரை செலவு செய்து, பிரகாரப்பத்தி, இராஸ்ரீகோபுரம், முன்வெளி மண்டபம் முதலிய திருப்பணிகளையும் சிறப்புறச் செய்து முடித்து, கும்பாபிஷேக விழாவையும் சிறப்புறச் செய்து முடித்தனர். பூஜைகள், போஜனம் முதலியவைகட்கு வேண்டிய வருமானமுள்ள விளைநிலங்களும் வாங்கி வைத்தனர். திருக்களர் ஸ்ரீலஸ்ரீ–ஆண்டவரின் வைகாசி விசாக நக்ஷத்திர குருபூஜைகள் எல்லாவற்றிற்கும் ஆண்டு தோறும் சென்று குருபூஜைகளை வெகுசிறப்பாக நடைபெறச் செய்து கொண்டு வந்தனர்.

**ஸ்ரீசிருங்ககிரி சாரதாபீடம் 34 – ஆம் பட்டம் ஜகத்குரு ஸ்ரீலஸ்ரீ சந்திரசேகர பாரதி சங்கராச்சாரிய சுவாமிகளை வரவேற்று உபசாரம் செய்து ஆசிபெறுதல்**

சிருங்ககிரி சாரதாபீடம் 34 – ஆம் பட்டம் ஜகத்குரு ஸ்ரீலஸ்ரீ சந்திரசேகர பாரதி சுவாமிகள் தமக்குள்ள ஆசார்ய விருதுகளுடன் தமிழ் நாட்டுக்கு விஜய யாத்திரையாக வந்து கொண்டிருந்த போது, நமது குருமூர்த்தி சுவாமிகள் எதிர்சென்று அழைத்து வந்து, ஸ்ரீ திருநெல்லையம்பாள் சமேத கொற்றவாளீசுவரர் ஆலய தரிசனம் செய்யச் செய்து, அங்குள்ள வேதபாட சாலையில் அமரச்செய்து, அவர்களது பூஜை முதலியவைகட்கும் போஜன வசதிகட்கும் வேண்டியவற்றை வேண்டியவாறு அனுப்பி மிகவும் அன்புடன் உபசாரங்கள் செய்தனர். பின்னர் கோவிலூர் மடாலயத்தின் பிரம்ம சபைக்கு, அடியார்கள் சங்கத்துடன் சென்று அழைத்து வந்து, உயர்ந்த புஷ்ப பீடத்தில் இருக்கச் செய்து அவர்கட்குப் பாதபூஜை முதலிய உபசாரங்களைச் சிறப்புறச் செய்தனர். அதனால் ஆச்சாரிய சுவாமிகள் அகமகிழ்ந்து, சுவர்ணப் பட்டாடை போர்த்துதல் செய்து, ஆசீர்வாதத்துடன் அருளிய தீர்த்தம், பிரசாதம் முதலியவைகளைப் பக்தி சிரத்தையுடன் பெற்று ஆனந்தமடைந்தனர். பின்பு ஆச்சாரிய சுவாமிகள் வேதபாட சாலையில் சிலநாள் தங்கி விட்டு திக் விஜயத்துடன் சிருங்ககிரிக்குச் சென்றனர்.

**ஸ்ரீசிருங்ககிரி சாரதாபீடம், 34 ஆம் பட்டம், ஜகத்குரு ஸ்ரீலஸ்ரீ சந்திரசேகர பாரதி சங்கராச்சாரிய சுவாமிகளின் அழைப்புக்கு இணங்கி, பெங்களூர் ஸ்ரீசங்கரமடத்தின் ஸ்ரீசாரதாம்பாள் பிரதிஷ்டைக்குச் சென்று ஆசிபெறுதல்**

பின்பு சிலகாலம் சென்றபின் ஸ்ரீ சிருங்ககிரி சாரதாபீடம் 34 ஆம் பட்டம், ஜகத்குரு ஸ்ரீலஸ்ரீ சந்திரசேகர பாரதி சங்கராச்சாரிய சுவாமிகள், பெங்களூர் ஸ்ரீசங்கரமடத்தில் ஸ்ரீசாரதாம்பாள் பிரதிஷ்டை செய்து கும்பாபிஷேகம் செய்தபோது, நமது குருமூர்த்தியாகிய ஸ்ரீலஸ்ரீ மகாதேவ ஞானதேசிக சுவாமிகட்கு அழைப்பு அனுப்பியிருந்தார்கள்.

அவ்வழைப்பிற்கிணங்கி நமது குருமூர்த்தி சுவாமிகள் தமது முக்கிய மாணாக்கர்களுடன் மகா. கோவிந்தசுவாமியாகிய அடியேனையும் அழைத்துக் கொண்டு, பெங்களூர் சென்று ஸ்ரீசங்கர மடத்திலிருந்த ஜகத்குரு ஸ்ரீலஸ்ரீ சந்திரசேகரபாரதி சுவாமிகட்குப் பாதகாணிக்கை, பழங்கள், புஷ்பங்கள் முதலியவைகளை வைத்து அவர்களை வணங்குதல் செய்தார்கள். அப்போது அவர்கள் நமது சுவாமிகட்குப் பல உபசாரங்களைச் செய்து ஆசி வழங்கினார்கள்.

அங்கு 10 நாள் வரை தங்கியிருந்து ஸ்ரீ சாரதாம்பாள் பிரதிஷ்டையுடன் கூடிய கும்பாபிஷேக தரிசனஞ் செய்து கொண்டார்கள்.

## சுருதி கூறுகின்ற "ஏகம் ஏவ அத்விதீயம்" என்பதன் விளக்கம் முதலியவற்றின் வினா விடைகள்; ஆச்சார்ய சுவாமிகளின் வினாக்களும், நமது சுவாமிகளின் விடைகளும்

அங்கு அவ்வாறு இருந்த நாள்களில் ஒரு நாள். ஸ்ரீலஸ்ரீ சந்திரசேகர பாரதி சுவாமிகள், நமது குருமூர்த்தி சுவாமிகளை நோக்கி, "குருபீடங்களில் அமர்கின்றவர்கள், ஒருவருக்கு ஒருவர் சந்திக்கும் காலங்களில் சாஸ்திரார்த்தங்களைச் சம்பாஷணை செய்து கொள்வது சாலச்சிறந்ததாகும். என்று கூறி, நமது சுவாமிகளுடன் வேதாந்த விஷயமாக உரையாடினார்கள்.

## வடநாட்டு யாத்திரை

பின்பு நமது குருமூர்த்தியாகிய ஸ்ரீலஸ்ரீ மகாதேவஞானதேசிக சுவாமிகள் வடநாட்டில் உள்ள காசி, அரித்துவாரம் முதலிய புண்ணியத் தலங்கட்குச் சென்று தரிசனம் செய்து வரவிரும்பினார்கள். தமதுடன் பின்னாளில் எட்டாம் பட்டமேற்ற ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர ஞானதேசிக சுவாமிகளையும், சில முக்கிய–மாணாக்கர் களுடன் மகா. கோவிந்த சுவாமிகளையும் கோட்டையூர் அழகப்ப ஐயா அவர்களையும் கூட அழைத்துக் கொண்டு வடநாட்டு யாத்திரை சென்றார்கள்.

## நமது குருமூர்த்தியாகிய ஸ்ரீலஸ்ரீ மகாதேவஞானதேசிக சுவாமிகளை நகரத்தார்கள் தங்கள் ஊர்களில் நடைபெறும் விசேடங்கட்கு அழைத்துச் சென்று ஆசி பெறுதல்

நகரத்தார்கள் தங்கள் ஊர்களில் நடைபெறுகின்ற சிவ, விஷ்ணுவாதி ஆலயங்களின் கும்பாபிஷேகங்கட்கும் உற்சவங்கட்கும் அவ்வக் காலங்களில் கோவிலூர் மடாலயம் சந்நிதானம் அவர்களையும், ஏனைய அடியார்களையும் மிகவும் மரியாதையுடன் அழைத்துப் போய் தெரிசனம் செய்ய வைத்து, மிகவும் சிறப்பான உபசரங்களைச் செய்து, சந்நிதானம் அவர்களின் ஆசீர்வாதம் பெற்றுக் கொண்டு மீண்டும் கோவிலூர் மடாலயத்திற்கு அழைத்து வந்து சேர்ப்பார்கள்.

## ஸ்ரீலஸ்ரீ–மகாதேவஞானதேசிகசுவாமிகளின் அருளாசியின் மகத்துவத்தினால், சீடர்களும் பக்தர்களும் சிறந்து விளங்குதல்

ஸ்ரீலஸ்ரீ மகாதேவஞானதேசிக சுவாமிகளின் அருளாசியுடன் வேதாந்த சாத்திர உபதேச பாடங் கேட்ட சீடர்கள் பலர், வைராக்கியத்துடன் கூடிய

ஆத்மஞானத்தை அடைந்து, சர்வதுக்க நிவிர்த்தி பரமானந்தப் பிராப்தி வடிவ முக்தி (வீட்டு) நிலையில் மகிழ்ந்து சிறந்து விளங்குகின்றனர்.

சுவாமிகளின் அருளாசி பெற்ற பக்தர்கள் பலர், தமக்குள்ள மனக் குறைகள் நீங்கி, மனநிறைவு பெற்று மகிழ்ந்து சிறந்து விளங்குகின்றனர்.

## ஸ்ரீலஸ்ரீ–மகாதேவ ஞானதேசிக சுவாமிகள் தமக்குப்பின் எட்டாம் பட்டத்தை ஏற்று இருக்கத்தக்க, ஞானா சாரியரின் நியமன உறுதிமுறி (உயில்சாசனம்) ஏற்படுத்தல்

பின்பு சிலகாலஞ் சென்றபின் சுவாமிகள், தமது திருமேனிக்குச் சிறிது நலக்குறைவு ஏற்பட்டதை யறிந்து தமக்குப் பின் எட்டாம்பட்டம் ஏற்று மடாலயப் பரிபாலனம் செய்யத் தகுந்த தகுதியுடையவர்கள் ஸ்ரீலஸ்ரீ–சோமசுந்தர ஞானதேசிக சுவாமிகளே, என்று அறிந்து, அவர்களை எட்டாம்பட்ட ஞானாசாரியராகக் குறிப்பிட்ட உறுதிமுறியைக் கலியுகாதி வருஷம் 5048 க்குச் சரியான விய வருஷம், கார்த்திகை மாதம், 28 ஆம் நாள் (ஆங்கிலம் 1946 ஆம் வருஷம், டிசம்பர் மாதம், 13 ஆம் நாள்) வெள்ளிக் கிழமையன்று எழுதி வைத்தார்கள்.

## ஸ்ரீலஸ்ரீ மகாதேவ ஞானதேசிக சுவாமிகளின் விதேகமுக்தி

பின்பு ஸ்ரீலஸ்ரீ மகாதேவஞான தேசிக சுவாமிகள் யாவரும் போற்றத்தக்க சிறந்த முறையில் மடாலய பரிபாலனம் செய்து கொண்டிருந்து தமது 66 ஆம் வயதில், கலியுகாதி வருஷம் 5049க்குச் சரியான சர்வசித்து வருஷம், ஆனி மாதம், 12 ஆம் நாள் (ஆங்கிலம் 1947 ஆம் வருஷம், ஜூன் மாதம், 26 ஆம் நாள்) குருவாரம், வளர்பிறை, நவமி திதி, அஸ்த நக்ஷத்திரம், வரியான்யோகம், பாலவ கரணம், சித்தயோகம் கூடிய சுபநாளில் துலாலக்கினம் கூடிய சுபவேளையாகிய பகல் 20.30 நாழிகையளவில் தமது ஜீவன் முக்தி நிலையை நீத்து, விதேக முக்தியை யடைந்து, பரிபூரண சச்சிதானந்த சிவவடிவமாக நிலைத்தனர். அப்போது அங்கிருந்த பெரியோர்கள், மாணாக்கர்கள், நகரத்தார்கள் முதலிய அனைவரும் சுவாமிகளின் பிரிவு ஆற்றாமையால் வருந்தி இருந்தனர்.

ஸ்ரீலஸ்ரீ மகாதேவ ஞானதேசிக சுவாமிகள் கோவிலூர் மடாலய குருபீடாதிபதியாக இருந்த காலம் 28 வருஷம் ஒரு மாதமாகும்.

## மோட்ச தீபப் பத்திரிகை

இவ்வாறு விதேக முக்தியடைந்ததை யாவருக்கும் அறிவித்துப் பத்தாம் நாள் நடைபெறும் மோட்தீப விழாவிற்கு யாவரும் வருமாறு குறிப்பிட்டு அச்சிட்ட மோட்சதீபப் பத்திரிகையில் உள்ள கவியும் வசனமும், வருமாறு:

உ

சிவமயம்

கோவிலூர் மடாலயம்

# ஸ்ரீலஸ்ரீ மகாதேவ ஞானதேசிக சுவாமிகள் அவர்கள் மோட்ச தீபப் பத்திரிகை

## ஞானிகள் மகிமை

பலன்கள் வேண்டிய பரிசெலாம் பலித்திடும் பரமதத் துவஞானி
நலங்கொ ணாமமா மந்திரஞ் செபித்திட நயந்தவ னீராடுஞ்
சலங்கொ டீர்த்தமா மவன்றிரு மேனியே சகலதெய் வமுஞ்செவ்வாய்
மலர்ந்த வாசக மறுபிறப் பெனவரு மயற்பிணி மருந்தாகும்.

பூமலியுலகில் எந்நாட்டினுஞ் சிறந்த நன்னாடாகிய பாண்டி வளநாட்டிலே சமிவனக்ஷேத்திரமென்னும் கோவிலூர் மடாலயத்தில் மடாதிபதியாக இருந்து தம்மை யணுகிய சாதன சம்பன்னரான முமுட்சுக்களுக்கு வேத வேதாந்தங்களின் பரம தாற்பரியமாகிய செம்பொருள் என்னும் பிரம தத்துவத்தைப் பாடமுறையில் உபதேசித்தருளி ஸ்ரீசற்குருமூர்த்தியாய் எழுந்தருளியிருந்து விளங்கிய ஸ்ரீலஸ்ரீ மகாதேவ ஞானதேசிக சுவாமிகள் அவர்கள் நிகழும் சர்வசித்து வருஷம் ஆனி மாதம் 12 ம் நாள் குருவாரம் நவமி திதி அஸ்த நக்ஷத்திரம் துலா லக்கினம் சித்தயோகம் கூடிய சுபதினத்தில் ஜீவன் முத்தித் தசையை நீத்து விதேக கைவல்லிய மெய்தினார்கள்.

மேற்படி ஞானதேசிக சுவாமிகளுக்கு இம்மாதம் 21 ம் நாள் ஸ்திரவாரம் துவிதியை திதி திருவோண நட்சத்திரம் சித்தயோகம் கூடிய சுபதினத்தில் பகலில் அபிஷேக அலங்கார ஆராதனையுடன் மகேசுவர பூஜையும் இரவு மோட்ச தீப மகோத்ஸவமும் நடைபெறுமாதலின் எல்லோரும் வந்து தரிசித்துப் பிரசாதம் பெற்றுப் பேரானந்தப் பெருவாழ்வைப் பெற வேண்டியது.

கோவிலூர் இங்ஙனம்

29–6–47 சோமசுந்தர ஞானதேசிகர்

உ

சிவமயம்

கோவிலூர் மடாலயம்

## ஸ்ரீலஸ்ரீ மகாதேவ ஞானதேசிக சுவாமி அவர்கள்

## பரிபூரணச் செய்யுள்

(திருவண்ணாமலை ஸ்ரீலஸ்ரீ நடேசஞானதேசிக சுவாமிகள் பாடியது)

ஐயாயி ரத்துநாற் பத்தொன்ப தாண்டுகலி
யாஞ்சர்வ சித்தானியில்
அமர்தேதி பனிரண்டு குருவார நவமிதிதி
யத்தநட் சத்திரத்தில்
நையாத பகனாழி கையிருப தரையிலே
நாடுவரி யான்பாலவம்
நண்ணுவளர் பிறைசித்த யோகந் திகழ்ந்திட்ட
நற்றுலா லக்கினத் தே
பொய்யாத வீரசே கரஞான தேசிகப்
புனிதனடி முடிபுனைந்தோன்
பொருவிலா மெய்யுணர்வை வயிராக மாதிநிறை
புண்ணியர்க் கருளுசீலன்
மெய்யாக விருபதுட னெட்டாண்டு கோவிலூர்
மிளிர்மடத் தாதிபத்யம்
மேவிய மஹாதேவ ஞானதே சிகனறிவு
மெய்யின்ப மாயினனரோ.

## ஸ்ரீலஸ்ரீ மகாதேவ ஞானதேசிக சுவாமிகளின் அருள் மேனியின் சமாதியமைப்பும் வழிபாடும்

பின்பு ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர ஞானதேசிக சுவாமிகள் ஸ்ரீலஸ்ரீ மகா தேவஞான தேசிக சுவாமிகளின் திருமேனியைச் சிறந்த பீடத்தில் அமைத்து பலபெரியோர்கணங்களும், அடியார்கணங்களும், தனவைசியர்கணங்களும், அன்பர்கணங்களும் புடைசூழப் பலவிதமான சிறந்த அபிஷேகங்களும், அலங்காரங்களும், ஆராதனை முதலியவைகளும் சிறப்புறச் செய்து அழகிய

புஷ்பவிமானம் அமைத்து அதில் திருமேனியை அமரச் செய்து, மேள தாளங்களோடு வீதிகளிலுள்ள பலரும் பூசனைகள் புரிந்த வண்ணம் சிறப்புற ஊர்வலமாகத் தாங்கிக் கொண்டு வந்து, அங்கு மதுநதியின் வடபால் உள்ள முந்திய குருமூர்த்தியாகிய ஸ்ரீலஸ்ரீ அண்ணாமலை ஞானதேசிக சுவாமிகளின் சமாதியாலயத்திற்கு வலதுபுறத்தில் சிறப்பாக அமைக்கப்பெற்ற குகையில், சாத்திர விதிப்படி பலவித உபசாரங்களுடன் சிறப்புறச் சமாதி வைத்தனர். அதன்மேல் சிவலிங்கப் பிரதிஷ்டை செய்து மூன்றாம் நாள் பூசை, பத்தாம் நாள் மோட்ச தீப பூசை, மண்டலாபிஷேக பூசை, முதலியவைகளைச் சிறப்பாகச் செய்தனர்.

பின்பு ஸ்ரீலஸ்ரீ மகாதேவ ஞானதேசிக சுவாமிகளின் மாணாக்கர்களான திருக்களர் கிருஷ்ணானந்த சுவாமிகள், சிவப்பிரகாச சுவாமிகள் முதலியவர்களை நகரத்தார்களிடமும், மற்றவர்களிடமும் ஆலயம் அமைப்பதற்கும், கும்பாபிஷேகம் பூசை முதலியவைகள் நடைபெறுவதற்கும் உதவியாக வேண்டிய பொருள்களை அன்பளிப்பாக வசூல் செய்து வரும்படி ஏற்பாடு செய்து, அவ்வாறு வசூல் செய்து கொண்டு வந்த நிதியைக் கொண்டு, அழகிய ஆலயம் அமைப்பித்து அதில் சிறந்த சிவலிங்கம் அமைத்து, சிறப்பாகக் கும்பாபிஷேகம் செய்து, திருவிளக்கேற்றுதல், மாத நக்ஷத்திர பூசைகள், ஆண்டு குருபூசைகள், முதலியவைகள் எப்போதும் சிறப்பாக நடைபெறும்படி செய்ய வேண்டிய ஏற்பாடுகள் அனைத்தையும் செய்தனர். இவர்களது குருபூசைகள் ஆண்டுதோறும் வரும் ஆனிமாத அத்த நட்சத்திர நாட்களில் சிறப்புற நடைபெறுகின்றன.

மேற்கூறிய திருவிளக்கேற்றுதல், பூசைகள் முதலிய பணிகளுக்கு வேண்டிய உதவிநிதி வருமானத்திற்கு மூலதனமாக இருப்பதற்காக மேற்படி வசூலான நிதியைக் கொண்டு ஸ்ரீலஸ்ரீ மகாதேவ ஞானதேசிக சுவாமிகளை இரண்டாவது குருவாக அடைந்த சிஷ்யர் என்ற முறையில் ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர ஞானதேசிக சுவாமிகள் பேருக்கு, காரைக்குடி சந்திரசேகரபுரத்தில் (தற்போது முத்துப்பட்டணம்) வாடகை வரக் கூடிய ஒரு கட்டிடத்தைக் கிரயம் வாங்கியும், திருக்களர் கோ. ஆ. வீர. மடாலயத்திற்குச் சொந்த நிலங்கள் உள்ள நல்லூர், திருக்களர், மருதவனம் கிராமங்களில் சுமார் 27 மா (9 ஏக்கர்) நிலங்கள் கிரயம் வாங்கியும் மேற்படி பூஜை முதலியவைகளின் செலவுகளுக்கான வருமானங்களுக்கு மூலதனம் என்ற விபரங்கள் குறிப்பிட்டுச் சாசனங்கள் எழுதிப் பதிவுகள் செய்யப்பெற்றன.

திருக்களர் கிருஷ்ணானந்தா சுவாமிகளால் மேற்படி நிலங்கள் நல்லமுறையில் பரிபாலனம் செய்யப் பெற்று மேற்படி கிருஷ்ணானந்த சுவாமிகள் முக்தி அடைந்த காலமான 1979 வரை சுமார் 15 ஏக்கர் (45 மா) விளைநிலங்கள் இருந்து வருகிறது.

*பின்னிணைப்பு*

## ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர ஞானதேசிக சுவாமிகள் கோவிலூர் மடாலயத்தில் எட்டாம் பட்டமுடைய குருபீடாதிபதியாக அமர்தல்

பின்பு ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர ஞானதேசிக சுவாமிகள் ஸ்ரீலஸ்ரீ மகாதேவஞானதேசிக சுவாமிகள் விதேக முத்தியடைந்த காலத்தின் பிறகாலம் முதல் எட்டாம் பட்டமுடைய குருபீடாதிபதியாக அமர்ந்தருளினார்கள்.

கோவிலூர் ஆதீன ஞானாச்சார்ய பரம்பரை
கோவிலூர் குருபரம்பரை முன்நாள் மாணாக்கரில் ஒருவர் பாடியது

பதினான்கு சீர் ஆசிரிய விருத்தம்

பரம்ஆக ஒளிர்சச்சி தானந்தம் ஆம்விண்டு
பங்கயன் வசிட்டர் சத்தி
பராசமா முனிமகா வியாசர்சீர் சுகர்கௌட
பாதர்கோ விந்த யோகி

அருளுருவம் ஆம் சங்க ராச்சாரி யாம் இறைவன்
அமர்பத்ம பாதர் உயர்அத்
தாமலகர் தோடகா சிரியர்வார்த் தீகர்வித்
தியாரண்யர் ஆகும் உரவோர்

இருள்உருவம் அற்றஅவர் மரபுஅதனில் வந்த சுப்
பிரமணிய தேவன் நயின
ஈசன் அழ கப்பஆ ரியன்வீர பத்ரகுரு
இன்பமுத் தைய அடிகள்

தெருள் உருவம் ஆம்உகந் தையன்நன் மைகளிலாத்
தீயனேன் தனையும் ஆண்ட
சீர்முத்தி ராமலிங் கேசதே சிகன் இவர்கள்
திகழ்பதம் அடைஞ்சு வோமே.

### மேற்படி கவியில் கூறியுள்ள ஞானாச்சாரியர்கள்

1. பரம்பொருளான சச்சிதானந்தசிவம் 2. விஷ்ணு 3. பிரம்மா 4 . வசிஷ்டர் 5. சத்தி 6. பராசரர் 7. வியாசர் 8. சுகர் 9. கௌடபாதர் 10. கோவிந்தயோகி 11. சங்கராச்சாரியர் 12. பத்மபாதர் 13. அஸ்தாமலகர் 14. தோடகாச்சாரியர் 15. வார்த்திகாச்சாரியார் (சுரேசுவராச்சாரியார்) 16. வித்தியாரண்யர்.

## அவர்கள் மரபில் வந்தவர்கள்

1. சுப்பிரமணிய தேசிகர் 2. நயினதேசிகர் 3. அழகப்பதேசிகர் 4. வீரபத்திர தேசிகர் 5. முத்தைய தேசிகர் 6. உகந்தலிங்க ஞானதேசிகர் 7. முத்திராமலிங்க ஞான தேசிகர் ஆவர்.

## கோவிலூர் மடாலய குருபீடப்பட்டம் ஏற்ற ஞானாச்சாரியர்கள்

1 ஆம் பட்டம் ஸ்ரீலஸ்ரீ–முத்திராமலிங்க ஞானதேசிகர் (கோவிலூர் ஆண்டவர்)

2 ஆம் பட்டம் ஸ்ரீலஸ்ரீ–அருணாசல ஞானதேசிகர் (துறவு ஆண்டவர்)

3 ஆம் பட்டம் ஸ்ரீலஸ்ரீ–சிதம்பரஞானதேசிகர் (கருணாநிதி சுவாமிகள்)

4 ஆம் பட்டம் ஸ்ரீலஸ்ரீ–இராமசாமி ஞானதேசிகர்

5 ஆம் பட்டம் ஸ்ரீலஸ்ரீ–வீரசேகர ஞானதேசிகர் (திருக்களர் ஆண்டவர்)

6 ஆம் பட்டம் ஸ்ரீலஸ்ரீ–அண்ணாமலை ஞானதேசிகர்

7 ஆம் பட்டம் ஸ்ரீலஸ்ரீ–மகாதேவ ஞானதேசிகர்

8 ஆம் பட்டம் ஸ்ரீலஸ்ரீ–சோமசுந்தர ஞானதேசிகர்

9 ஆம் பட்டம் ஸ்ரீலஸ்ரீ–இராமநாத ஞானதேசிகர்

10 ஆம் பட்டம் ஸ்ரீலஸ்ரீ–அரு. ராமனாத ஞானதேசிகர்

11 ஆம் பட்டம் ஸ்ரீலஸ்ரீ–காசிவிசுவநாத ஞானதேசிகர்

12 ஆம் பட்டம் ஸ்ரீலஸ்ரீ–நாச்சியப்ப ஞானதேசிகர்

நமது குருபரம்பரை எக்காலமும் சிறந்து நீடூழி வாழ்வதாகுக.

ஸ்ரீலஸ்ரீ மகாதேவ ஞானதேசிக சுாவமிகள் அவர்களின்

சரித்திரச் சுருக்கம் நிறைவு பெற்றது.

ஓம் தத் ஸத்

உ
சிவமயம்

கோவிலூர் மடாலயம்

# ஸ்ரீலஸ்ரீ மகாதேவ ஞானதேசிக சுவாமிகள் தோத்திரப் பதிகம்

## காப்பு

## நேரிசை வெண்பா

பூமணக்குங் கோயிலூர்ப் புண்ணியமட டாலயத்தான்
நாமணக்கும் வேதாந்த நல்லிசையான் கோமணக்கு
தேவா மகாதேவ தேசிகனை யான்புகழ்
நீவா விநாயகனே நேர்.

## எழுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

பூ மலி யுயிர்கள் பரமதா மின்பம்
பொருந்தவார் கருணைமா நிதியாய்த்
தேமலி கரத்தின் ஞானமுத் திரையாற்
றேர்ந்திடிற் சீவனும் பரனுந்
தோமற வேக மெனத்தெரித் திதுநற்
சுருதியின் பொருளிதை யறிந்து
சேமமா ரெனவே யருண்மகா தேவ
தேசிகா சரணமே சரணம். 1

கனவினி லவித்தை காரண மாகக்
காணுசீ வேசுர சகத்தை
நனியுநா னெனதென் றெனுமய லதுபோ
னனவினி லவித்தைகா ரணமாய்த்
துனியசீ வேச சகத்தைநா னெனதென்
றுயாகக் கிரந்தியார்ந் தனைதீர்
தினமுனை யறியென் றருண்மகா தேவ
தேசிகா சரணமே சரணம். 2

தூலதே கந்தா னனமய கோசந்
தொடர்ந்திடு மிலிங்கமாந் தேகஞ்

சாலுபி ராண மயமனோ மயம்பின்
சாருவிஞ் ஞானமா மயமாய்க்
கோலுமுக் கோச மவித்தையா னந்த
கோசமா மறைப்பிவை யலனீ
சீலனே யறியென் றருண்மகா தேவ
தேசிகா சரணமே சரணம். 3

நனவினிற் றோன்றுந் தூலமே தோன்றா
நலமிலாக் கனவுகா லத்தே
நினைகனாச் சான்ற தாகநீ தோன்றல்
நிதமதா முனதிருப் பதுவா
முனதிருப் புருவந் தோன்றுகாற் றூல
மொழிந்துதோன் றாததா லலனீ
தினமுற வறியென் றருண்மகா தேவ
தேசிகா சரணமே சரணம். 4

கனவினிற் றோன்று மிலிங்கமுந் தோன்றாக்
கனமுறுஞ் சுழுத்திகா லத்தே
துலுமிருட் சான்ற தாகநீ தோன்றல்
தொலைவிலா வுனதிருப் பதுவா
மினியவுன் னுருவந் தோன்றுகா லிலிங்க
மிறந்துதோன் றாததா லலனீ
தினநனி யறியென் றருண்மகா தேவ
தேசிகா சரணமே சரணம். 5

சுழுத்தியிற் றோன்று மவித்தையுந் தோன்றாச்
சுகநனாச் சுழுத்திகா லத்தே
முழுச்சிதா னந்த மாகநீ தோன்றல்
முடிவிலா வுனதிருப் பதுவாம்
வழுத்துன துருவந் தோன்றுகா லவித்தை
மாய்ந்துதோன் றாததா லலனீ
செழிப்புற வறியென் றருண்மகா தேவ
தேசிகா சரணமே சரணம். 6

இவ்வித மோர்காற் காண்பதோர் கால
மில்லதா யறிபடு பொருளாய்
வெவ்வியப் பிரிய மாய்விடப் படலால்
வீவசச் சடத்துய ரதனாற்

கவ்விய மூன்று தேகமா யமைந்து
காணுமைங் கோசமு மலனீ
செவ்விதி னறியென் றருண்மகா தேவ
தேசிகா சரணமே சரணம். 7

அறிவறி யாமைப் பொருளறக் கோச
மைந்தனின் பாவம் பரவ
முறுவதாங் காலு மென்றுமோர் விதமே
யுறவிருந் தறிந்துயர் பிரேமை
யுறைவதாற் சச்சி தானந்த மதனா
லுரியசான் றறிவுநீ பிரிவில்
செறிவதா யறியென் றருண்மகா தேவ
தேசிகா சரணமே சரணம். 8

வியட்டிதே காதி சான்றதா நீயிவ்
விதமுறுஞ் சமட்டிதே காதி
மயக்கசான் றான சச்சிதா னந்த
வடிவுறு மகண்டமாம் பிரமஞ்
சுயத்துறும் பிரமம் நீகட வானஞ்
சூழ்மகா வானென வேகந்
தியக்கற வறியென் றருண்மகா தேவ
தேசிகா சரணமே சரணம். 9

அகண்டபூ ரணமாய்ச் சச்சிதா னந்த
மாமுன திடமக மிதமாய்
நிகழ்மய லுலகத் தோற்றமார் சான்றி
னோர்கனாத் தோற்றநே ரிலையா
மிகழ்கனாத் தோற்றந் தேர்ந்திடிற் சான்றா
மெனச்சகந் தேரினீ யேயாந்
திகழ்ந்துடன் சுகியென் றருண்மகா தேவ
தேசிகா சரணமே சரணம். 10




## ஸ்ரீமகாதேவ ஞானதேசிக சுவாமிகள் துதி

கரும்பினு மினிய கனிரசங் கலந்த
கற்கண்டி னமுதவாய் மொழியும்
விரும்பிய வடியர் வினையையே ஈறுக்கும்
வித்தையும் ஞானமும் விளம்பும்
அரும்பிணி யகற்றும் அருள்வடி வாகி
அமர்ந்திடு மாதிமா தேவன்
அரும்பிர காச னருட்பெருங் கழல்கள்
அகத்தினுஞ் சிரத்தினு மணிவாம்

-காரியானூர் ஸ்ரீ நடேசஞானதேசிக சுவாமிகள்

